25th March 1958]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: For how many years will the Government go on giving this grant? Will the Hon. Minister also tell us whether the other States also are giving similar grants?

THE HON. SRI C. SUBRAMANIAM: Yes, Sir, the other States are also giving similar grants. In making this grant, we decided on an *ad hoc* basis.

*Government Headquarters Hospital, Cuddalore.*

*400 *Q.*—SRI A. GOVINDASAMY: Will the Hon. the Minister for Revenue be pleased to state the present stage of construction of the new ward with provision for 100 beds in the Government Headquarters Hospital, Cuddalore?

THE HON. SRI M. A. MANICKAVELU: Detailed plans and estimates have been prepared and the work will commence after it is technically sanctioned by the Chief Engineer, P.W.D.

SRI A. GOVINDASAMY: ஸார், இந்த ஆஸ்பத்திரிக்கு அதிகப்படியாக 100 பெட்டுக்கு ஒரு வார்டு கட்ட இரண்டு ஆண்டுகளுக்கு முன் முதலமைச்சர் அவர்கள் அஸ்திவாரக்கல் நாட்டியும் இது வரையில் வேலை செய்யப்படவில்லை. இங்குள்ள ஜன நெருக்கத்தைத் தவிர்த்து உடனடியாக வேலை நடத்த சர்க்கார் உத்தரவு போடுவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: வேலையை உடனடியாகத் துவக்க நல்ல சூழ்நிலை ஏற்பட்டு விட்டது. இப்போது அஸ்திவாரம் போடப்படும் நிலைமையில் இருக்கிறது.

SRI M. JAGANNATHAN: இந்த ஆண்டு வரவு செலவுத் திட்டத்திலே தென் ஆற்காடு மாவட்ட தலைமை ஆஸ்பத்திரியை அபிவிருத்தி செய்வதற்காகவும், இன்னும் இதைப் போன்ற ஆறு மாவட்ட ஆஸ்பத்திரிகளை அபிவிருத்தி செய்ய 13 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருப்பதாக அந்த வரவு செலவுத் திட்ட அறிக்கையிலே இருக்கிறது. அந்தப் பணத்தை தென் ஆற்காடு ஜில்லாவில் இருக்கிற மாவட்ட தலைமை ஆஸ்பத்திரியின் படுக்கை எண்ணிக்கையை—அதாவது பெட் ஸ்ட்ரெங்த் என்று சொல்வார்கள்—அதிகரிக்க செலவு செய்து அந்த வசதிகளைச் செய்து கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: கனம் அங்கத்தினர் எல்லா மாவட்டங்களுக்கும் 13 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள் என்று சொன்னதாகத் தெரிகிறது. இந்த ஆஸ்பத்திரிக்கு மாத்திரம் 13.9 லட்ச ரூபாய் செலவாகப் போகிறது.

SRI T. KARIA GOUNDER: கனம் சபாநாயகர் அவர்களே, 13 லட்சம் ரூபாய் தென் ஆற்காடுக்கு என்று சொன்னார்கள். மற்ற ஜில்லாக்களுக்கும் ஏதாவது செய்ய சர்க்காருக்கு உத்தேசம் இருக்கிறதா ?

MR. SPEAKER: முதல் கேள்வியிலிருந்து எப்படி இந்தக் கேள்வி வரும். நீங்கள் ஒரு தனிக் கேள்வி போடுங்கள்.

*Bifurcation of the Tiruchirapalli district.*

*401 *Q.*—SRI M. KALYANASUNDARAM AND SRI A. R. MARIMUTHU: Will the Hon. the Minister for Revenue be

[25th March 1958

pleased to state—

(*a*) whether there is any proposal under consideration for forming a new district of Pudukottai by bifurcating the present district of Tiruchirappalli;

(*b*) how long this proposal has been under consideration; and

(*c*) when a final decision is expected to be taken?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) & (*c*) Do not arise.

SRI M. KALYANASUNDARAM : புதுக்கோட்டை ஜில்லா என்று தனியாகப் பிரிக்காவிட்டாலும், திருச்சி ஜில்லாவிலிருந்தும், கோயம்புத்தூர் ஜில்லாவிலிருந்தும் சேர்த்தோ, அல்லது திருச்சி ஜில்லாவிலிருந்தும் ராமநாதபுரம் ஜில்லாவிலிருந்தும் சேர்த்தோ, இன்னும் அதிகப்படியான ஜில்லாக்களைப் பிரிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : தற்போது சில ஜில்லாக்கள் பெரிதாக இருப்பதால் நிர்வாக சௌகரியத்திற்காக சில ஜில்லாக்களில் ஒரு ஜில்லா கலெக்டர் நிர்வாகம் செய்வதை, 2 கலெக்டர் நியமித்து அதாவது ஒரு அடிஷனல் கலெக்டர் போட்டு நிர்வாகம் செய்ய உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

SRI S. LAZAR : அப்படி பிரிவினை ஏற்படுத்துவதாக இருந்தால் பொது மக்களுடைய அபிப்பிராயத்தையும், பொது மக்களின் பிரதிநிதிகளான சட்ட சபை அங்கத்தினர்களையும் இதைப் பற்றி கேட்பார்களா என்று கேட்க ஆசைப்படுகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த அபிப்பிராயம் அவசியமில்லை. ஏனென்றால், இந்த அதிகப்படியான ஜில்லா கலெக்டரும் ஹெட்க்வார்ட்டர்ஸிலே இருந்து நிர்வாகம் செய்யப்போகிறார். அந்த நான்கு ஜில்லாக்கள்—கோயம்புத்தூர், சேலம், தஞ்சை, திருச்சி.

SRI V. SANKARAN : ஏற்கெனவே நமது ராஜ்யத்தில் சேர்வதற்கு முன்னாலேயே புதுக்கோட்டை ஒரு சமஸ்தானமாக இருந்ததால் அங்கு பல பெரிய நல்ல வசதிகள் பொருந்திய கட்டிடங்கள் ஹெட்க்வார்ட்டர்ஸிலே இருக்கின்றன. அவைகளை உபயோகித்துக்கொண்டு அதை ஒரு ஜில்லாவாக அமைக்கவேண்டுமென்று பொதுமக்கள் கிளர்ச்சி செய்து வந்தார்கள். அதற்கு அரசாங்கம் இணங்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஜில்லாவைப் பிரித்து அதற்கு எதைத் தலைநகரமாக ஏற்படுத்த வேண்டுமென்று யோசிக்கும்போது இந்தத் தகவல்கள் உபயோகமாயிருக்கும்.

SRI T. S. RAMASWAMY PILLAI : கனம் அமைச்சர் அவர்கள் நிர்வாக சௌகரியத்திற்காக இன்னொரு கலெக்டரை 4 ஜில்லாக்களில் நியமிக்கப்போவதாகச் சொன்னார்கள். ஒவ்வொரு ஜில்லாவிற்கும் இரண்டு கலெக்டர் நியமிக்கப் போகிறார்களா ? அல்லது ஜில்லாவையே இரண்டு ஜில்லாக்களாகப் பிரித்து இரண்டு கலெக்டர்களைப் போடப் போகிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தத் திட்டம் இன்னும் பரிசீலனையில் இருக்கிறது. இப்பொழுது முடிவாக எதுவும் சொல்ல முடியாது.

SRI S. NAGARAJA MONIGAR : நிர்வாக சௌகரியத்திற்காக பெரிய ஜில்லாக்களை இரண்டாகப் பிரிக்கவேண்டுமென்று கருதினால், ஒரு பகுதிக்கு ஒரு கலெக்டரையும், இன்னொரு பகுதிக்கு இன்னொரு கலெக்டரையும் ஏற்படுத்தினால் நலமாக இருக்குமல்லவா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படித்தான். ஏற்கெனவே இருக்கிறவருக்கு ஒரு பாதி. புதிதாக வருபவருக்கு ஒரு பாதி.

25th March 1958]

**Sri A. V. P. ASAITHAMBI** : புதுக்கோட்டை மாவட்டத்தை தனியாக அமைக்க வேண்டும் என்று சொல்லுகிருர்கள். அதே மாதிரி, ராமனுதபுரம் மாவட்டத்திலுள்ள சில பகுதிகளை புதுக்கோட்டையுடன் சேர்த்து, மிகுதி இருக்கின்ற ராமனுதபுரம் மாவட்டத்தின் பெயரை விருது நகர் மாவட்டம் என்று மாற்றி அமைப்பதற்கு சர்க்கார் முன்வருமா? ஏனென்ருல் இப்பொழுது ராமனுதபுரம் மாவட்டத்தின் "ஹெட்குவார்ட்டர்ஸ்" மதுரையில் இருக்கிறது.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : இந்தப் பிரச்னை மும்முரமாக எடுத்துக்கொள்ளும் போது இவைகள் எல்லாம் கவனிக்கப்படும்.

**Sri V. ARUNACHALA THEVAR** : புதுக் கோட்டை சமஸ்தானமாக இருந்த காலத்தில், அங்கு கட்டிட வசதிகள் இருந்தன. அதை வைத்துக் கொண்டு அதை ஒரு தனி ஜில்லாவாக பிரிக்கலாம் என்று கனம் முதல் அமைச்சர் அவர்கள் சொல்லி இருக்கிருர்கள். சர்க்கார் கூடிய சீக்கிரம் அதை தனி ஜில்லாவாக பிரிப்பார்களா என்று தெரிய ஆசைப்படுகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : "கூடிய சீக்கிரம்" என்ருல் அரசாங்க "அகராதியில்" வேறு அர்த்தம். (சிரிப்பு)

**Sri M. C. MUTHUKUMARASWAMY** : பிரிக்கப்படும் ஜில்லாக்களில் தஞ்சை ஜில்லாவும் ஒன்று என்று அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். அப்படி தஞ்சை ஜில்லா பிரிக்கப்படும்போது காரைக்கால் பிரதேசத்தையும் சேர்ப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : ஜில்லாக்கள் பிரிக்கப்படும் போது இவைகள் எல்லாம் கவனிக்கப்படும். இரண்டு மூன்று ஜில்லாக்களிலிருந்து சில பகுதிகள் எடுக்கப்படவேண்டியிருக்கும். சில பகுதிகள் சேர்க்கப்பட வேண்டியிருக்கும். இப்பொழுது இதைப் பற்றி ஒன்றும் சொல்வதற்கு இல்லை.

**Sri A. GOVINDASAMY** : "கூடிய சீக்கிரம்" என்ற வார்த்தைக்கு அரசாங்க "டிக்ஷனரியில்" வேறு அர்த்தம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். அது எவ்வளவு காலம் என்பதை விளக்கிச் சொல்வார்களா?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : சாதாரணமான காலத்தை விட கொஞ்சம் அதிகப்படியான காலம் என்று அர்த்தம். (சிரிப்பு)

**Sri P. G. MANICKAM** : கோயம்புத்தூரில் இருக்கும் பல இலாகாக்கள் இப்பொழுது இரண்டாகப் பிரிக்கப்பட்டு, தலைமை ஸ்தாபனங்களும் வெவ்வேறு இடங்களுக்கு மாற்றப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆகையால் அங்கு இருக்கும் ஜில்லா கலெக்டர்களுக்கு ஸ்பெஷல் அதிகாரிகள் நியமிக்கப் பட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER** : இது கோயம்புத்தூர் ஜில்லாவைப்பற்றிய கேள்வி. இந்த கேள்வியை இப்பொழுது அனுமதிக்க முடியாது.

*Basic Education.*

* 402 *Q.*—Sri T. S. RAMASWAMY PILLAI and Sri A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the progress of the Basic System of education; and

(*b*) the facilities provided for the students, who have completed their Post-Basic education, for their further Collegiate studies?